

# சிறகடிப்பு

மார்ச்–ஏப்ரல் 2024

சிறகு 21 · இதழ் எண் 46 · அசைவு 2

தனிச் சுற்றுக்கு மட்டும்

இது **நற்செய்தித் திருப்பணி இயக்கம்**
அனைவருக்கும் அருட்செய்தி இதன் நோக்கம்

நிறுவுநர் & வெளியிடுபவர்

**பொன்.வ.கலைதாசன்**
**(வெங்கடேசன்)**

ஆசிரியர்

**சே.காரல் மார்க்ஸ்** B.A., B.L.,





இவ்விதழ் நதி இயக்கத்தின் இரு மாத இலவச இதழ். நதிஇ உறுப்பினர்களுக்கும், பிரார்த்தனைப் பங்காளர் களுக்கும் இலவசமாக அனுப்பிவைக்கப்படுகிறது.


இவ்விதழுக்கான உங்கள் படைப்புகள் வரவேற்கப் படுகின்றன. பிரசுரிக்கப்படாதவற்றைத் திருப்பி அனுப்பிவைக்க இயலாது. படைப்புகளைச் சுருக்கவும், திருத்தவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. இவ்விதழின் படைப்புகளுக்குப் படைப் பாளியே பொறுப்பாவார். ஆக்கபூர்வமான விவாதங் களை ஏற்படுத்தக்கூடும் எனக் கருதினால் எமக்கு உடன்பாடில்லாத கருத்துகளும் பிரசுரிக்கப்படும்.


படைப்புகளை அனுப்பவும் இவ்விதழ் தொடர்பான அனைத்து விபரங்களுக்கும் தொடர்பு கொள்க:

**ஆசிரியர் குழு**

+91 -971 5552 552

மின்னஞ்சல்

sirahadippu@gmail.com

*அலுவலக முகவரி*

**நற்செய்தித் திருப்பணி இயக்கம்,**
**சகோதர ஐக்கியத் திருச்சபை,**
**90, பஜனை கோவில் தெரு,**
**பீமன்தாங்கல், திருப்பெரும்புதூர் 602 117**
**காஞ்சிபுரம் மாவட்டம், தமிழ்நாடு**

971 5552 552

மின்னஞ்சல்: goreachmission@gmail.com

**இயக்குநர்கள்:**
**எச். கிஷோர் குமார்**
சே. காரல் மார்க்ஸ்
இரா. விவேக் ராஜா


## திறந்தால்...



## வைர வரிகள்

வறுமை நமக்குத் தலைகுனிவை
ஏற்படுத்துவதில்லை; வறுமையின்போது நாம்
எடுக்கும் முடிவுகளே நம்மை
வெட்கப்படுத்திவிடுகின்றன.
வறுமையிலும் கடவுளைச் சார்ந்து
உண்மையாக இருக்க மகாத்துமாக்களால்
மட்டுமே இயலும். சிலநேரங்களில்
மகாத்மாக்களும் தலைகுனிய நேரிடுகிறது.

- பொன்.வ.கலைதாசன்






# அன்பின் இழை

“மயிலிறகு குட்டி போடாது என்று புரிய ஆரம்பிக்கும்போது பால்யத்தின் சிறகுகள் உடையத் தொடங்குகின்றன" என்றார் எழுத்தாளர் பிரபஞ்சன்.

சில உண்மைகள் புரியத்தொடங்கும்போது சில நன்மைகள் விலகத் தொடங்குகின்றன. சிலவற்றை இழந்துதான் வேறு சிலவற்றை நம்மால் பெறமுடிகிறது. அது போல்தான் உணர்வை இழந்து அறிவைப் பெறுகிறோம். அறிவு உணர்வுகளைக் கொன்றுவிடுகிறது. நாம் மிகவும் வியந்து இரசித்த ஒரு திரைப்படக் காட்சி எவ்வாறு படமாக்கப்பட்டது என்ற உண்மை தெரியவரும் போது உயரத்தில் பறந்துகொண்டிருக்கும் ஒரு பட்டம் நூலறுந்து விழத் தொடங்குகிறது. ஆதலால், எல்லாவற்றையும் அறிந்துகொள்வது நல்லதல்ல என்றே தோன்றுகிறது.

ஆனால், சிலநேரங்களில் அறிவு நம் அச்சத்தையும் அகற்றிவிடுகிறது. தெரு விளக்குகள் இல்லாத, அறிவியல் வளர்ச்சி பெறாத காலத்தில் நாம் கேட்டு நடுங்கிய பேய்க்கதைகளை இன்று நம் வீட்டுக் குழந்தைகள் கேட்டுவிட்டு கெக்கேபெக்கே என்று சிரிக்கிறார்கள். இருளைக்கண்டு அஞ்சியது, வெட்ட வெளியில் வீசும் சுழல்காற்றில் பேய் இருப்பதாக நம்பியது போன்ற சில பிள்ளைப்பருவப் பிழைகளை நம் அறிவு சரிசெய்து விட்டது. எனினும், அப்படியே வாழ்ந்திருக்கலாமோ என்ற எண்ணமும் நம்முள் எழுவதைத் தடுக்கமுடியவில்லை.

இப்போது அறிவா? உணர்வா? என்ற போராட்டம் வலுக்க, இவ்விரண்டையும் சமநிலைப்படுத்தவேண்டிய இடத்தில் நாம் வந்து நிற்கிறோம். அதற்கு நாம் பயன்படுத்த வேண்டிய ஒரே ஆயுதம் அன்பே ஆகும். "உங்கள் அன்பானது அறிவிலும் எல்லா உணர்விலும் இன்னும் அதிகமாய்ப் பெருக..." உங்களுக்காக நான் வேண்டுதல் செய்கிறேன் என்று பிலிப்பியருக்குப் பவுல் எழுதுகிறார் (1:9) லாசருவின் கல்லறைமுன் நின்று கண்ணீர்விட்ட இயேசு தன் அறிவையும் உணர்வையும் அன்பினால் நிர்வகித்தார். அறிவைத் தொலைத்த உணர்வும் உணர்வே இல்லாத அறிவும் மனிதம் தழைக்க ஒருபோதும் பயன்பட மாட்டா! அவையிரண்டும் அன்பின் இழையுடன் சேர்த்துப் பின்னப்படவேண்டும். ஆம், அன்பின் இழையுடன்!



- பொன்வக



# இயேசு உயிர்த்தெழுந்தது உண்மையா?

■ யோசுவா த ஞானசேகர்

இயேசு கிறிஸ்துவைக் குறித்து பேசும்போது, இந்தக் கேள்வி அதிகமாகக் கேட்கப்படுகிறது.

இயேசு மரித்தபின் உயிரோடெழுந்தார், அவரைப் பின்பற்றுவோருக்கும் உயிர்த்தெழுதல் உண்டு என்றும் சாவை வெல்லும் வல்லமையை அவர் தருகிறார் என்பதால் சாவைக்குறித்து எங்களுக்கு பயமில்லை என்றும் கிறிஸ்தவர்களாகிய நாம் சொல்வது அவர்களுக்கு வியப்பாகவும், கேலியாகவும் தோன்றுகிறது. அவர்கள் அதை உண்மை என்று நம்புவதில்லை. இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுதல் உண்மையாகவே நடந்த ஒன்றுதானா என்பதை இந்தக் கட்டுரையில் ஆராய்வோம்.

## இயேசுவின் மரணம் குறித்து...

"இயேசு உண்மையிலேயே சாகவில்லை, செத்ததுபோல பாவனை செய்தார் அல்லது ஒரு தீவிர மயக்க நிலையிலிருந்து மீண்டு எழுந்தார் என்றும், ஏதாவது ஒரு போதைப் பொருளைப் பயன்படுத்தினதினால் அந்த மயக்க நிலையை அவர் அடைந்திருக்கலாம்" என்றும் சிலர் சொல்கின்றனர். இன்னும் சிலரோ, "தீர்க்கதரிசனங்களை நிறைவேற்ற வேண்டிய கட்டாயம் அவருக்கு இருந்ததால், அவர் இப்படி பாவனை செய்து தன் சீஷர்களுக்குத் தன்னை மேசியாவாகக் காட்டிக்கொண்டார்" என்கிறார்கள். வேறுசிலர்: "இயேசுவின் உயிரற்ற உடல் காணாமல் போய் விட்டது" என்று கூறுகிறார்கள். இவ்வாறு பலரும் பலவிதமாக இயேசுவின் உயிர்த்தெழுதலை மறுக்கின்றனர். இஸ்லாம் மார்க்கத்தில் இயேசு மரிக்கவில்லை என்பது ஒரு போதனையாகவே சொல்லப்படுகிறது.

இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலை மறுக்கும் சில தவறான கொள்கைகளை விவாதத்திற்கு எடுத்துக் கொண்டு அவற்றிற்கு இங்கு விடை காண்போம்!

## மயக்க நிலை கொள்கை Swoon Theory

அதாவது, இயேசு ஏதோ ஒரு போதை மயக்கத்தில் இருந்தார் என்பதே இக்கொள்கை. இதற்கான ஆதாரமாக அவர்கள் இரண்டு வசனங்களை மேற்கோள் காட்டுகின்றனர். முதலாவதாக, "கடற்காளானைக் காடியிலே தோய்த்து, அதை ஒரு கோலில் மாட்டி, அவருக்குக் குடிக்கக் கொடுத்து" என்று மாற்கு 15:36 இல் குறிப்பிடப்பட்டிருப்பதால், அவருக்கு இந்த விதத்திலே போதை மருந்து கொடுக்கப்பட்டிருக்கலாம் என்று சொல்கின்றனர்.

அடுத்ததாக, "அவர் இத்தனை சீக்கிரத்தில் மரித்துப்போனாரா என்று பிலாத்து ஆச்சரியப்பட்டு" என்று மாற்கு 15:44ல் குறிப்பிடப்பட்டிருப்பதால், அவ்வளவு சீக்கிரமாக யாரும் சிலுவை தண்டனையினால் மரிக்கமுடியாது. எனவே, இயேசு உண்மையில் மரிக்கவில்லை என்று சொல்கின்றனர்.

## நமது விளக்கம்:

ஒரு சம்பவத்தில் குறிப்பிட்ட சில விஷயங்களை மட்டும் மேற்கோள்காட்டி, மற்ற விஷயங்களைப் புறக்கணித்துவிட்டு, ஒரு கூற்றை உண்மையாக்க நினைப்பது ஒரு சரியான ஆராய்ச்சிமுறை ஆகாது. நடந்த அனைத்தையும் முழுவதுமாகக் கவனிப்பது மிக மிக அவசியம். சிலுவை மரணம் என்பது மிகக் கொடியதான ஒன்று. பெர்சியர்கள் காலத்தில் அறிமுகப்படுத்தப்பட்ட இந்த தண்டனை முறையை, கான்ஸ்டாண்டைன் எனும் ரோமப் பேரரசன் அதிகாரபூர்வமாக ஒழிக்கும்வரை ரோமர்கள்

உலகெங்கிலும் பயன்படுத்தினர். இயேசுவும் சிலுவை தண்டனையை ஏற்றுக் கொள்ளும்போது அவருக்கு எந்தவிதச் சலுகையும் வழங்கப்படவில்லை. சொல்லப் போனால் சிலுவையில் அறையப்படும் மற்ற மனிதர்களைவிட அவர் மிக மோசமாகவே நடத்தப்பட்டார். கெத்சமனே தோட்டத்தில் தீவிர மனவேதனையுள்ளவராக அவர் ஜெபித்தபோது "அவரது வேர்வை இரத்தத்தின் பெருந்துளிகளாகத் தரையில் விழுந்தன" (லூக்கா 22:44) என்று அந்த நிகழ்வைப் பற்றி லூக்கா எனும் மருத்துவர் குறிப்பிடுகிறார். இரத்தம் வியர்வை நாளங்களில் கலக்கும் இந்த விதமான தீவிர மனவேதனையின் வெளிப்பாட்டை மருத்துவர்கள் "hemato–hydrosis" என்பார்கள். ஆழ்ந்த துக்கமும், மிகுந்த மனவேதனையும் உள்ள அதிதீவிர நிலையில் இதுபோன்ற சம்பவம் நிகழலாம். ஆனால், இது சாதாரணமாக மனிதனுக்கு நிகழ்வதில்லை. இதற்குப்பின் இயேசு அடிக்கப்படுகிறார், பின்னர் அங்கும் இங்குமாக அலைக்கழிக்கப்படுகிறார், பின்னர் பிலாத்துவின் போர்ச்சேவகரால், வாரினால் அடிக்கப்பட்டு இரத்தம் சிந்துகிறார், பின்னர் பாரமான சிலுவையைச் சுமக்கமுடியாமல் திணறுகிறார், பின்னர் இன்னொரு மனிதனின் உதவியோடு அதனைச் சுமந்து செல்கின்றார், பின்னர் கைகளிலும் கால்களிலும் ஆணிகளால் துளைக்கப்பட்டு, அவரின் சிலுவை நாட்டப்படுகிறது. அதில் அவர் தொங்குகிறார். இத்தனைக் காயங்களும் வேதனையும் நிறைந்த நிலையில் சிலுவையில் தொங்கின ஒருவர் போதை மருந்து எடுத்து மயக்கமடைந்தால் அவரால் மூன்றாவது நாள் எழுந்து நடமாட முடியுமா? காயங்கள் ஆறுமா? அறிவுள்ளோர் இதனைச் சிந்திக்க வேண்டாமா? எனவே இயேசுவானவர் மயக்கம் அடையவோ, மரித்தவரைப் போல நடிக்கவோ இல்லை!

### திருடப்பட்டது என்னும் கொள்கை
### Theft Theory.

மயக்கநிலை கொள்கையை நாம் முறியடித்து விட்டோம் என்று நம்மை ஆசுவாசப்படுத்திக்கொள்ள முடியாதவாறு எதிரி எய்யும் அடுத்த அம்புதான் இந்தக் கொள்கை. அதாவது "இயேசுவின் உடல் திருடப்பட்டு விட்டது" என்பது! அவரது உடலைச் சீடர்கள் திருடி வைத்துக் கொண்டு உலகத்தை ஏமாற்றியுள்ளார்கள் என்பது இவர்களின் விமர்சனம். இது ஒன்றும் புதிதல்ல, இது ஏற்கனவே யூதமதத் தலைவர்களால் பணம் கொடுத்து பரப்பப்பட்ட பொய்ச் செய்தி (மத் 28:13) ஆகும்.

இதையும் ஆராயலாம் வாருங்கள். இயேசுவை அடக்கம் செய்த கல்லறை ஒரு பாறையில் குகையாக வெட்டப்பட்ட ஒன்று. உள்ளே ஓர் அறைபோல் இருக்கும். அக்காலத்தில் எருசலேமிலிருந்த பணக்காரர்கள், இது போன்ற கல்லறைகளைத் தங்களுக்கென முன் கூட்டியே வெட்டி வைத்துக்கொள்வது வழக்கம். அரிமத்தியா என்னும் ஊரைச் சேர்ந்த யோசேப்பு எனும் செல்வந்தரும் இதுபோன்று ஒரு கல்லறையை வெட்டி வைத்திருந்தார். அதில்தான் இயேசுவின் உடல் வைக்கப்பட்டு ஒரு பெரிய கல்லால் மூடப்பட்டது. கல்லறை வாயிலில் இருந்த கல்லைப் புரட்ட ஒரு தனிமனிதனால் முடியாது. இந்தச் சூழ்நிலையில் நீதிபதி பிலாத்துவின் கூற்று முக்கியமாகக் கவனிக்கப்படவேண்டிய ஒன்றாகும். "அதற்குப் பிலாத்து: உங்களுக்குக் காவல் சேவகர் உண்டே; போய், உங்களால் கூடிய மட்டும் பத்திரப்படுத்திக் கொள்ளுங்கள் என்றான். அவர்கள் போய்க் கல்லுக்கு முத்திரைபோட்டு, காவல்வைத்து, கல்லறையைப் பத்திரப்படுத்தினார்கள்." என்கிற குறிப்பு மத்தேயு 27:65 இல் உள்ளது. எனவே, இயேசுவின் சீஷர்கள் அந்தப் பெரிய கல்லைப் புரட்டி, இவ்வளவு பலத்த காவலையும் தாண்டி அவரது உடலைத் திருடுவது சாத்தியமில்லாத ஒன்று, மற்றும் இயேசுவின் சீஷர்கள் யூதருக்கு பயந்து ஒளிந்திருந்தார்கள் என்றும் நாம் யோவான் 20:19 ல் வாசிக்கிறோம். எனவே, இத்தனைத் துணிகரமான செயலில் அவர்கள் ஈடுபட்டிருக்க வாய்ப்பு இல்லை. மேலும், கல்லறைக்குச் சென்ற பெண்கள் இயேசு உயிர்த்தெழுந்தார் என்று தங்களுக்குச் சொன்ன செய்தியை இயேசுவின் சீஷர்கள்

நம்பவில்லை என்றும் வாசிக்கிறோம் (லூக்கா 24:11). ஒருவேளை ரோமர்கள் இயேசுவின் உடலைத் திருடியிருப்பார்களா? அதுவும் சாத்தியமில்லை. ஏனென்றால், அப்படிச் செய்ய வேண்டிய எந்த ஓர் அவசியமோ, அவசரமோ, கட்டாயமோ அவர்களுக்கு இல்லை.

மேலும், கொரிந்தியருக்கு எழுதிய முதலாவது கடிதத்தில், 'உயிர்த்தெழுந்த இயேசுவானவர் அவருடைய சீஷர்களைத் தவிர 500க்கும் அதிகமானோருக்குத் தன்னை உயிரோடெழுந்தவராகக் காண்பித்தாரென்றும் அவர்களில் பலர், அந்தக் கடிதத்தை தான் எழுதும்போது உயிரோடு இருப்பதாகவும் (1 கொரிந்தியர் 15:3–6) பவுல் எழுதுகிறாரென்றால், அந்தக் கடிதத்தை வாசிப்பவர்கள் இந்த உண்மையை ஆராய்ந்து பார்த்துக் கொள்ள முடியும் என்று நாம் புரிந்துகொள்ளலாமல்லவா? அதுமட்டுமின்றி, இயேசுவின் சீஷர்கள் இயேசுவின் உயிர்த்தெழுதலைப் பிரசங்கித்தால் அக்காலத்தில் அவர்களுக்கு மரணம் நிச்சயம் என்பதை அறிந்திருந்தும், மரணத்திற்கு அஞ்சாமல் இந்த உண்மையைப் பறைசாற்றி, கொடூரமாகக் கொல்லப்பட்டு மரித்தார்கள். ஒருவேளை இயேசுவின் உயிர்த்தெழுதல் பொய்யென்றால் பொய்யான ஒன்றுக்காக அவர்கள் உயிரை விட்டிருக்கமாட்டார்களே!

**பகற்கனவுக் கொள்கை Hallucination**

இன்னும் சில விமர்சகர்கள், இயேசுவின் உயிர்த்தெழுதல் என்பது சீஷர்கள் கண்ட மாயத்தோற்ற பகற்கனவு – Hallucination என்கின்றனர்.

இதையும் நாம் எளிதாக மறுக்கலாம். எப்படியென்றால், மனநல மருத்துவர்களின் கூற்றுப்படியும் ஆராய்ச்சியின் படியும், இப்படிப்பட்ட பகற்கனவுகள் ஒரே நேரத்தில் திரளான மக்களுக்கு வராது. ஒவ்வொரு தனி மனிதனுக்கும் வெவ்வேறு விதமான கனவுகள்தான் வருமே தவிர ஒரே கனவு திரளான மக்களுக்கு வரவே வராது. எனவே, ஒரே பகற்கனவை ஒரு திரள் கூட்டமே கண்டது என்பதை ஏற்றுக் கொள்ளமுடியாது!

இவ்வாறாக, எந்தக் கோணத்தில் அணுகினாலும் ஆராய்ந்தாலும், நிறுவப் படுகிற மறுக்க முடியாத உண்மை என்னவென்றால், "இயேசுவானவர் வேதவாக்கியங்களின்படி நமது பாவங்களுக்காக மரித்து, அடக்கம்பண்ணப்பட்டு, வேதவாக்கியங்களின்படி மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்தார்" (1 கொரி. 15:3,4) என்பதே.

எனவேதான் "தேவபக்திக்குரிய இரகசியமானது யாவரும் ஒப்புக்கொள்ளுகிறபடியே மகா மேன்மையுள்ளது. தேவன் மாம்சத்திலே வெளிப்பட்டார், ஆவியிலே நீதியுள்ளவரென்று விளங்கப்பட்டார், தேவதூதர்களால் காணப்பட்டார், புறஜாதிகளிடத்தில் பிரசங்கிக்கப்பட்டார், உலகத்திலே விசுவாசிக்கப்பட்டார், மகிமையிலே ஏறெடுத்துக் கொள்ளப்பட்டார்." என்று அப்போஸ்தலனாகிய பவுல் 1 தீமோத்தேயு 3:16 இல் குறிப்பிட்டுள்ளார்.

இதனடிப்படையில் நாம் உறுதிபடவும் உரக்கவும் கூறுவது என்னவென்றால், இயேசு கிறிஸ்து உண்மையிலேயே உயிர்த்தெழுந்தார்!!! •

முதுநிலை இயன்முறை மருத்துவரும் இறையியலாளரும் நற்செய்தியாளரும் திருச்சபைப் போதகருமாகிய மரு. யோசுவா, சென்னை கண்ணகி நகரில் உள்ள, வாழ்வுதரும் நற்செய்தி மன்றத்தின் மூலம் அருட்பணியாற்றிவருகிறார்.





# பெரும்பாடில்லா ஸ்திரீ

■ ச. ஆதி நாராயணன்



பெயர் கூடச் சொல்லப்படாத
பெரும்பாடுள்ள பெண் நான்,
என் பெயரை உச்சரித்தாலே
தீட்டாகிவிடுமோ?

வீட்டிற்கு விலக்கானவள்,
வீட்டிற்கு தூரமானவள்,
நாட்டிற்கு .......
சொல்லவா வேண்டும்?

காசை இழந்தவள்,
காலத்தை இழந்தவள், ஏன்
கடவுளையும் கூட
இழந்தவள் நான்!

இனி இழக்க
என்ன இருக்கிறது?
தொடத் துணிந்துவிட்டேன்.

விசுவாசத்தாலே
தாவீது பாய்ந்தான்
சேனைக்குள்ளே;
விசுவாசத்தாலே
நான் பாய்ந்தேன்
ஜனக்கூட்டத்திற்குள்ளே!

என்
வஸ்திரத்தின் கறை நீங்க,
அவர்
வஸ்திரத்தின்
கரை தொட்டேன்!

துணிந்து, அவர் வஸ்திரத்தைப்
பின்னாகத் தொட்ட நான்.
நடுங்கி, அவர்
முன்னாகப் பணிந்தேன்!

பழைய ஏற்பாட்டின்
இரத்தம் சிந்துதலை
நிறுத்த வந்தவர்
என் இரத்தம்
சிந்துதலையும்
நிறுத்தினாரே!

சிலுவையில்,
தம் இரத்தம் சிந்தப்பட
ஒப்புக்கொடுத்தாரே!

என் வேதனை நீங்க
தம் வல்லமையைப் பயன்படுத்தினவர்;
சிலுவையில்
தம் வேதனை நீங்கத்
தம் வல்லமையைப் பயன்படுத்தாதவர்!
சிறுமைப்பட்டவர்...
வெறுமைப்பட்டவர்...!

நான் சொஸ்தமானது
வஸ்திரத்தால் அல்ல,
விசுவாசத்தால்!

வேத புத்தகத்திலே
என் பெயர்
பெரும்பாடுள்ள ஸ்திரீ,
ஜீவ புத்தகத்திலோ
என் பெயர்
பெரும்பாடில்லா ஸ்திரீ! •

ஆதம்பாக்கம் கிறிஸ்தவ சபையின் ஐக்கியத்தில்
உள்ள முனைவர். ச. ஆதி நாராயணன்,
கணினி பொறியியல் துறை வல்லுநர்.

# சிலுவைமொழி வெண்பா

பொன்.வ.கலைதாசன்

பேரன்புடையீர்,

இறைமகன் இயேசு கிறித்து சிலுவையில் மொழிந்த ஏழு சொற்றொடர்களைக் குறித்து சற்றொப்ப உலகின் எல்லா மொழிகளிலும் உரைநடையிலும் கவிதை நடையிலும் பல்வகை நூல்கள் இதுகாறும் எழுதப்பட்டுள்ளன.

உலகின் வேறெந்த மொழிக் கவிதைகளுக்கும் இல்லாத சிறப்பு தமிழின் மரபுக் கவிதைகளுக்கு உள்ளது என்பதை யாப்பறிந்தோர் அறிவர். அத்தகைய தமிழ்க்குடியில் என்னைப் பிறப்பித்து, யாப்பையும் கற்பித்த இறையைப் போற்றிட, யானறிந்த வரையில் முயன்று இந்த நேரிசை வெண்பாக்களை இயற்றியுள்ளேன். அறிஞர்காள் ஆதரிப்பீர், சுவைஞர்காள் சுவைப்பீர்!

## நேரிசை வெண்பா

ஆதி முதலிருந்த சோதி யவன்புவியின்
மீதில் பிறப்பெய்தி மானுடர்க்காய் – நாதியற்று
நீதி நிறைவேற்ற நீள்குருசில் தொங்குங்கால்
ஓதியநற் சொற்க ளிவை.

### 1. மன்னிப்பு

ஏது புரிகின்றோம் என்றே புரியாமல்
தீது புரிவோர்தம் தீச்செயலை – தாதஎம்
நீதி பரனேநீர் மன்னித் தருள்கென்றார்
ஆதி முதல்வ னவர்!

### 2. மீட்பு

இறைவா உனதரசை எட்டுகையில் என்னை
மறவாய் எனக்கள்வன் வேண்ட – பரத்தில்
இருப்பாய் எனதருகில் இன்றேயென் றண்ணல்
உரைத்தார் திருவாய் மலர்ந்து!

### 3. பரிவு

சாவு மரத்தினிலே செந்நீர் உகும்போதும்
மேவு மரியவளின் மெய்காக்க – யோவானைக்
கூவி யழைத்து மகனாக்கித் தாயாரின்
நோவு களைந்தார் அறி!

### 4. ஏக்கம்

ஈசன் மனுக்குலத்தை மீட்கக் கொலைமரத்தில்
நீச நிலையடைந்து தந்தையிடம் – பேசுகையில்
என்னை உதறியதேன் தேவா எனுங்கதறல்
கண்ணை நனைக்கும் குரல்!

### 5. தாகம்

மேகம் கருத்திருக்க மேனி துடிதுடிக்க
ஏகத் திருமைந்தன் மானுடர்க்காய்த் – தேகத்தில்
சாகும் பொழுதாங்கே வேத உரைக்கேற்ப
தாகம் எனக்கென் றனர்!

### 6. வெற்றி

ஓடித்தார் பகையை இடித்தார் சுவரை
முடித்தார்நம் மீட்பின் கணக்கை – அடித்தோர்
குடிக்கக் கொடுத்தகடுங் காடி அருந்தி
முடிந்ததென்று ரைத்தார் கிறிஸ்து!

### 7. நிறைவு

இப்புவியில் எந்தாய் எனக்களித்த ஊழியத்தை
எப்பிழையு மின்றி நிறைத்திட்டேன் – அப்பாநான்
ஒப்புவித்தேன் என்னாவி உம்கரத்தி லென்றியேசு
செப்பினார் மேன்மை சிறந்து!

### அழைப்பு

மாசு கறைபடிந்த மண்ணுலக வாழ்வினின்று
வீசு புகழ்மணக்கும் விண்வாழ்வை – நேசர்தம்
பாச மதனால் அருள்வாரே மீட்பிற்கி
யேசு கதிவே றிலை

### முடிப்பு

சிலுவை மரத்தினின்று சிந்தியவிம் மொழிகள்
நிலுவை எதுவுமின்றி நீசர் – பளுவைத்
தொலைத்த வகையுரைக்கும், ஏற்போர் எவர்க்கும்
நிலைத்தபெரு வாழ்வும் தரும்! •

*இப்பாடலைச் சிறப்புற அமைக்க எனக்கு உதவிய அறிஞர்கள் பாவலர் ம ஜோயல் டேவிட்சன் ஐயா, திரு. ந ஜான் ஜெயானந்தம் ஐயா மற்றும் என் யாப்பிலக்கண வழிகாட்டி திரு. மு. ஜான்சன் ஆகியோருக்கு இதய நன்றிகள். கர்த்தருக்கே மாண்பும் மாட்சியும் உரித்தாகட்டும்!*




75 வருடங்களுக்கு முன்பு நடந்த உண்மைச் சம்பவம். அமெரிக்காவின் சிகாகோ மாநகரில் பிறந்தவன் ஸ்டீவ் தாம்சன். உயர்நிலைப்பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு, 18 வயதில் அமெரிக்கக் கப்பற்படையில் சேரும்போது புகைப்பிடிக்கும் பழக்கம் விரைவில் ஏற்பட்டது. அதைத் தொடர்ந்து ஏவுகணைக் கப்பலில் பயிற்சி பெற்றுக்கொண்டிருந்தபோது, ஒரு கப்பலில் பயிற்சி முடித்த பின்பு மற்றொரு கப்பலுக்கு அனுப்புவார்கள். ஜப்பானில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த கப்பலுக்கு ஸ்டீவ் தாம்சன் அனுப்பி வைக்கப்பட்டபோது வயது 19. அங்கு ஒரு ஜப்பானியப் பெண்ணோடு பழக்கம் ஏற்பட்டு அவளோடு வாழத் தொடங்கினான் ஸ்டீவ். ஆனால் போதை மருந்துக்கு அடிமையாகி இருந்த அவன் எதிர்பாராத நிலையில் அவளைக் கொலை செய்து விட்டான். இதன் காரணமாக 7 ஆண்டுகள் ஜப்பானிய சிறைச்சாலையில் குற்றமனச்சாட்சியோடு போராடிக்கொண்டிருந்த அவனை தேவனுடைய ஊழியர் ஒருவர் சந்தித்தார்.

“இயேசு கிறிஸ்து இழந்துபோனவர்களைத் தேடி மீட்கவும், அநேகருடைய பாவத்திற்காகத் தன்னுடைய உயிரைக்கொடுக்கவும் வந்தார்” என்று அவர் கூறினார். கிறிஸ்தவம் “வெள்ளைக் காரர்களின் சமயம்” என்று கூறி எப்போதும் வேதாகமத்தையும் இயேசுகிறிஸ்துவையும் எதிர்த்து வந்தவன் ஸ்டீவ். ஆனால் அந்த ஊழியர் மூலம் தேவன் தொடர்ந்து பேசினார்: “தேவன் தம்முடைய குமாரனை இவ்வுலகிற்கு அனுப்பினார். அவர் தன்னுடைய முழு வாழ்க்கையையும் சிலுவையில் அடிக்கப்பட்டு கொலைசெய்யப்படுவதற்கு ஒப்புவித்தார். உலகத்திற்காகவும் உனக்காகவும் அவர் மரித்தார்” என்னும் செய்தியை அந்த ஊழியர் தொடர்ந்து கூறியபோது முதலில் நம்பமுடியாமல் இருந்த ஸ்டீவ் பின்னர் அவரை விசுவாசித்தான்.

தேவனிடத்தில் தன்னுடைய பாவங்களை ஒத்துக்கொண்டு அறிக்கையிட்டான். இயேசு கிறிஸ்து தனக்காக மரித்தார் என்பதை உணர்ந்து அவருக்கு நன்றி கூறினான். இப்பொழுது தேவன் தன்னை மன்னித்து விட்டார் என்ற நிச்சயத்தைப் பெற்றான். ஸ்டீவ் ஜப்பானிய சிறையில் இருந்த சமயத்தில் பன்னிரெண்டுக்கும் மேற்பட்ட எம்மாவு வேத பாடங்களைப் படித்து முடித்தான்.

இதை வாசிக்கும் நீங்கள் எப்படிப்பட்ட பாவத்தில் வாழ்ந்து கொண்டிருந்தாலும், உங்களை நேசிக்கும் தேவன், உங்களைப் பாவத்திலிருந்து விடுதலையாக்கும்படி அவருடைய குமாரனை சிலுவையில் மரிக்க ஒப்புக்கொடுத்தார். உங்கள் பாவங்களுக்கான தண்டனையை அவர் ஏற்றுக்கொண்டார். இயேசுகிறிஸ்துவை நீங்கள் விசுவாசிக்கும்பொழுது உங்கள் பாவத்திலிருந்து முற்றிலும் விடுதலை அடைவீர்கள். •

- மோரியா ஊழியங்கள் வெளியிட்ட “ஜெயிக்கவே பிறந்தோம்” என்ற புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டது.




■ ரூத் இராசன்

தேவ சாயலாக உருவாக்கப்பட்ட ஆதாமும், ஏவாளும் தேவ பிரசன்னத்தில், தேவனோடு உறவாடினவர்களாக, பூமியில் சகல அதிகாரங்களோடும் மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தனர். ஒருநாள் வஞ்சகனின் வார்த்தைக்கு ஏவாள் செவிமடுக்க அதன் தொடர்ச்சியாக விளைந்தது விபரீதம்! *(1 தீமோ 2:14,15.)* மொத்த உலகமும் பாவத்திற் குள்ளாகி, மனுக்குலம் தன் அதிகாரம், வல்லமை எல்லாவற்றையும் இழந்து அடிமை யாகிவிட்டது. பாவம் செய்த மனுக்குலத்தை மீட்டெடுக்க கிறிஸ்து, மரியாள் என்ற கன்னிப் பெண்ணின் மகனாகப் பிறந்து, பாவத்தின் சம்பளமாகிய மரணத்தைத் தம் மரணத்தின்மூலம் பரிகரித்து, சத்துருவை ஜெயித்து, சகலவற்றையும் மீட்டெடுத்தார்.

### பாவத்தின் பழியும், மீட்பின் வழியும்

உலகில் பாவம் நுழைய ஏவாள் என்றொரு பெண் காரணமாகிவிட்டாள் என்று உலகம் பெண்களைப் பழிக்கிறது. ஆனால், கருணைமிக்க கடவுள், மரியாள் என்னும் ஒரு பெண்ணின் கருவில் தம் திரு மைந்தனை உதிக்கச் செய்து பெண்குலத்தை மேன்மைப்படுத்தினார்! கடவுளின் வார்த் தையை மீறிய ஒரு பெண்ணின் மூலமாக உலகம் பாவத்திற்குள்ளானது, கடவுளின் வார்த்தையை நம்பி ஏற்றுக்கொண்ட *(லூக்.1:38)* ஒரு பெண்ணின் மூலம் இரட்சகர் இவ்வுலகில் தோன்றினார். கடவுள் பெண் களை ஒருபோதும் கீழ்நிலையில் வைக்க வில்லை; மாறாக இச்சமூகமே நம்மைக் கீழ்ப்படுத்த முயற்சிக்கிறது! ஆயினும் இச்சமூகத்தின் கற்பிதங்களைத் தகர்த் தெறிந்து கர்த்தருக்கென்று தங்களை அர்ப்பணித்த பெண்களால் பிரகாசிக்க முடியும் என்பதே விவிலியம் விளக்கும் உண்மை! நாம் நம் எண்ணங்களையும் சிந்தனைகளையும் மாற்ற வேண்டும். உலக மக்கள் பேசுவதைப்போலவும், சிந்திப்பதைப் போலவும் இல்லாமல் கிறிஸ்துவின் சிந்தனை களையும் எண்ணங்களையும் நமதாக்கிக் கொண்டால், நம்மாலும் பிரகாசிக்கமுடியும்.

### வேதத்தில் பிரகாசித்த பெண்கள்

தன் சிந்தனையை மாற்றிச் செயல் பட்ட எஸ்தரால் தேசத்தின் சட்டமே மாற்றி யெழுதப்பட்டது *(எஸ்தர் 4:16;8:9)*. தன் சிந்த னையை மாற்றிக்கொண்டு இஸ்ரவேலின் தேவனைப் பற்றிக்கொண்ட ரூத், இயேசு பிறந்த சந்ததியின் குடிவழிப் பட்டியலில் அவரின் மூதாதையருள் ஒருத்தியாக இடம் பெற்றாள். *(ரூத் 1:16;மத்:1:5)*. தன் சிந்த னையை மாற்றி, தெளிந்த புத்தியோடு நற்கிரி யைகளைச் செய்து அநேக விதவைகளுக்கு ஆசிர்வாதமாக வாழ்ந்தாள் தொற்காள் *(அப்:9:36)*

இவர்களெல்லாரும் தங்கள் சமகாலச் சமுதாயக் கட்டுப்பாடுகளால் ஏதோ ஒரு மூலை யில் முடங்கிக் கிடந்துவிடாமல் பல பாடுக ளுக்கு நடுவிலும் தேவனுக்குப் பிரியமான காரியங்களைச் சிந்தித்து துணிவுடன் செயல் பட்டு தேவனுக்காய்ப் பிரகாசித்தார்கள்.

சகோதரியே, சமுதாயம் உன்மீது கட்டமைத்துள்ள மாய பிம்பங்களை உடைத்து வெளியே வா. கிறிஸ்து உன்னில் மகிமைப்படக் காத்திருக்கிறார்! பெண்ணே, விழித்தெழு! •

ரூத் இராசன் திருவேட்டநல்லூர் அருட்பணியாளர் யஹோஷூஅ இராசன் அவர்களின் துணைவி ஆவார்



# பால் புதுமையினரின் பரிதாபங்கள்

■ ஆண்ட்ரூ கிங்ஸ்லி ராஜ்

தகவல் தொழில்நுட்ப அறிவு பெருகி வரும் இந்த இருபத்தியோராம் நூற்றாண்டில் நம் சமூகம் எதிர்கொள்ளும் மிகப்பெரிய சிக்கல் LGBTQ என்னும் சீரழிவுக் கருத்தியல். இவர்களைத் தமிழில் பால் புதுமையினர் எனலாம். யார் இந்தப் பால் புதுமையினர்?

**பால்புதுமையினரின் தொன்மம்**

வரலாற்றைப் புரட்டிப் பார்ப்போமானால் கடவுளுக்குப் பிடிக்காத செயல்களை மனிதர்கள் தொடர்ச்சியாகச் செய்வதன் மூலம் கடவுளுக்கு எரிச்சலூட்டுவதை அறியமுடியும். கடவுள் மனிதனை ஆணும் பெண்ணுமாகப் படைத்து அவர்களுக்குள் ஒரு திருமண உறவை ஏற்படுத்துவதை திருவிவிலியத்தின் முதல் புத்தகத்தில் பார்க்கிறோம். கடவுள் ஏற்படுத்திய இந்த ஒழுக்கநீதியை மறுதலித்து அதற்கு நேர்மாறாக நடந்துகொள்ளும் கூட்டத்தினர் தான் இவர்கள்! இக்காலத்தில் மட்டுமன்று, ஆதிகாலத்திலிருந்தே மனிதர்கள் தங்கள் பாலின வரையறைகளை மீறிய உறவுகளில் ஈடுபட்டு வந்திருக்கிறார்கள்! அதை நியாயப்படுத்தவே தற்போது அமைப்பாகத் திரண்டிருக்கிறார்கள். அந்த அமைப்பின் பெயரே LGBTQ!

*பால் புதுமையினர் – ஒரு விளக்கம்*

LGBTQ என்பது ஓர் ஆங்கிலச் சொற்றொடரின் சுருக்கம். L – லெஸ்பியன்: பெண் ஈர்ப்பு கொண்ட பெண்கள்; G– கே: ஆண் ஈர்ப்பு கொண்ட ஆண்கள்; B – பைசெக்சுவல்: இருபாலினர்மீதும் ஈர்ப்பு கொண்டவர்கள்; T– ட்ரான்ஸ் ஜெண்டர்: தன் பாலினத்தை மாற்றிக்கொள்பவர்கள். Q– குயர்: தங்கள் பாலினத்தைப் பற்றிய தெளிவு அற்றவர்கள். இந்த அவலம் வெறும் ஐந்து எழுத்துகளில் முடிந்துவிடுவதில்லை. இதன் தொடர்ச்சியாக ஐம்பதிற்கும் மேற்பட்ட பிரிவுகள் இருக்கின்றனவாம். வலது சாரியினர் இப்பொழுது இந்தச் சமூகத்தினருக்கு அரசு அங்கீகாரம் கொடுத்து சிவப்பு கம்பளம் விரித்து வரவேற்கின்றனர்.

LGBTQ சமூகம் இயற்கையானதல்ல, ஏன்? இதன் நடைமுறைச் சிக்கல்கள் என்ன? கிறிஸ்தவக் கண்ணோட்டத்தில் LGBT ஏற்புடையதா? LGBT சமூகம் மனம் திரும்பவேண்டுமா? போன்ற கேள்விகளுக்கான பதில்களை இந்தக் கட்டுரையில் சுருக்கமாகக் காண்போம்.

**இது ஒரு மனப்பிறழ்வுக் கூட்டம்**



ஆண்டுதோறும் ஜூன் மாதம் பெருமை மாதமாக எண்ணப்பட்டு வானவில் கொடியேந்தி ஊர்வலம் நடப்பதை நாம் பார்க்கிறோம். இந்தப் பெருமைநடை (Pride Walk) ஊர்வலத்தில், தன்னை மாற்றுப் பாலினத்தினராக எண்ணிக் கொள்ளும் ஒரு பாலினர் கலந்து கொள்வர். இதில் மேற்கத்திய நாடுகளில் ஒருபடி மேலே சென்று, நான் என்னை ஒரு தவளையாக உணர்கிறேன், நான் என்னை ஒரு நரியாக உணர்கிறேன் என்போர் பலர் கலந்து கொள்வதைப் பார்க்கலாம்.

இவர்களுடைய குரல் யாதெனில், என் பிறப்பு என்னைத் தீர்மானிக்கக் கூடாது, நான் யார் என்பதை நானே தீர்மானிப்பேன் என்பதே. அப்படியானால் இயற்கையாக கடவுள் கொடுத்த பாலுணர்வை ஏற்றுக்கொள்ள மறுத்து தனக்கு இஷ்டமான பாலுணர்வைத் தெரிவுசெய்ய முனைகிறார்கள். ஒரு பெண்ணுக்கு இன்னொரு பெண்ணின் மேலோ, ஓர் ஆணுக்கு இன்னோர் ஆணின் மேலோ பாலியல் ஆசை வருவது இயற்கையல்ல. இவை கடவுளின் படைப்பின் இலக்கணத்தை மீறுவது, அதாவது பாவம் ஆகும்! இதை பைபிள்: "இச்சைரோகம்" (ரோகம் = வியாதி), "அசுத்தம்" "அவமானம்", "அவலட்சணம்" ஆகிய வார்த்தைகளைக் கொண்டு கண்டிக்கிறது. இப்படிப்பட்டவர்கள் சிறந்த மனநல மருத்துவரை அணுக வேண்டும். இவை மனநலம் சார்ந்த பிரச்சனையல்ல என்று வாதிடுவோர் பெரும்பாலும் உணர்ச்சிவசமான கதைகளைத்தான் கொண்டு வருகிறார்களே அன்றி முறையான அறிவியல் காரணங்களைக் கொண்டு வருவதில்லை. ஒரு குழந்தை கருவில் உருவாகும்போது அதன் எலும்புகளும், உடல் பாகங்களும், தோல்களும் உருவாகின்றன. அவற்றின் மூலம் அந்தக் குழந்தை ஆண் (அ) பெண் என்பதை அறிந்துகொள்ளலாம். ஒருபோதும் ஒரு பெண்குழந்தை ஆணுறுப்போடும் ஓர் ஆண் குழந்தை பெண்ணுறுப்போடும் பிறப்பதில்லை. இன்னும் க்ரோமோஸோமை வைத்து இவற்றை அணுகினால் கூட "xy" என்ற க்ரோமோஸோமுடன் பிறக்கும் குழந்தை ஆண் என்றும் "xx" என்ற க்ரோமோஸோமுடன் பிறக்கும் குழந்தை பெண் என்றும் தீர்மானித்து விடலாம். ஆணிற்குரிய எலும்புகளும், உடல் அங்கங்களும், க்ரோமோஸோமும் கொண்ட ஒருவர் வளர்ந்துவரும்பொழுது தன்னை பெண்ணாக உணர்வதும் மருதலையாக உணர்வதும் மனப்பிறழ்வே அன்றி வேறல்ல. ஓரினச் சேர்க்கையும் மனப்பிறழ்வே!

### இவர்களால் ஏற்படும் சிக்கல்கள்

கழிப்பறையில் ஆரம்பித்து, பேருந்துப் பயணங்களில் நீண்டு, கோயில், குடும்ப விழாக்கள்வரை நம் அன்றாட நடைமுறை வாழ்வில் இருபாலினத்தில் ஒருவராகிய நாம் இந்த LGBTQ சமூகத்தால் அநேக நடைமுறைச் சிக்கல்களைச் சந்திக்கிறோம்.

ஆணாகப்பிறந்தும் தன்னைப் பெண்ணாக உணரும் ஒரு நபர் பெண்கள் பயன்படுத்தும் அதே கழிப்பறையைத்தான் நானும் பயன்படுத்துவேன் என்கிறார். இவர்களுக்கென்று தனி கழிப்பறை கட்டினால் அதை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். அப்படியே தனி கழிப்பறை பயன்பாட்டிற்கு வந்தாலும் இருபாலினத்தினர்மீதும் மோகம் கொண்ட ஒருவர் எந்தக் கழிப்பறையைப் பயன்படுத்தினாலும் மற்றவருக்குச் சிக்கல் தான்! இவர்களின் இந்த முறையற்ற பாலின உறவை நியாயப்படுத்த, "விலங்குகளைப் பாருங்கள்" என்று மிருகங்களின் பாலுறவை நமக்கான முன்மாதிரியாகக் காட்டுகிறார்கள்! மனிதர்கள் ஏன் விலங்குகளைப் பார்த்து வாழவேண்டும்? மனிதர்கள் கடவுளால் படைக்கப்பட்டவர்கள் என்பதை இவர்கள் அறியாததாலேயே இந்தச் சிக்கல்!

### சமூக அச்சுறுத்தல்

ஓர் ஆண் ஒரு பெண்ணின்மேல் (அ) ஒரு பெண் ஓர் ஆணின்மேல் தன் காதலைத் தெரிவிப்பதே இயற்கையான பாலின விருப்பமாகும். ஆனால் ஒரு பெண்ணிடம் அவளின் சிறு வயது பெண் தோழி திடீரென்று தன்னை ஓர் ஆணாக உணர்வதாகக் கூறி, பாலின மாற்று அறுவை சிகிச்சையையும் செய்து கொண்டு தன் காதலை வெளிப்படுத்தினால் என்னவாகும்? ஒன்று, நெருங்கிய தோழியைப் பிரிய மனமில்லாத இந்தச் சாதாரண பெண் அவளைத் தன் வாழ்க்கைத் துணையாக ஏற்பாள்

(அவ்வாறு ஏற்றுக்கொண்டாலும் அவர்களால் இயற்கையான பாலுறவு கொள்ள முடியாது!) அல்லது அந்தக் காதலை நிராகரிப்பாள். அப்படி நிராகரித்த ஒரு பெண்ணைக் கொடூரமாகக் கொன்ற சம்பவம் கடந்த 2023 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் சென்னையில் பணிபுரிந்துவந்த ஐ.டி ஊழியருக்கு நடந்தது. இங்கே கவனத்தில் கொள்ள வேண்டியது:– L G B T Q சமூகத்தினர் தங்கள் சமூகத்தினுள் மாத்திரம் வாழ்க்கைத் துணையைத் தேடுவதில்லை. அவர்கள் பொது உலகில் நுழைந்து பொதுமக்களைச் சீண்டுகிறார்கள். இவர்கள் நம் குழந்தைகளைத் தங்கள் வலைக்குள் இழுக்க முயன்று நகரம் கிராமம் என எங்கும் சுற்றித் திரிகிறார்கள். LGBTQ சமூகத்தினரால் பரப்பப்பட்டு வரும் ஓர் ஆங்கிலப்பாடலில் பின் வரும் வரிகள் இடம்பெற்றுள்ளன:– "நாங்கள் உங்கள் குழந்தைகளை மாற்றுவோம்", "மெல்ல மெல்ல, அமைதியாக சிறிது சிறிதாக", "நீங்கள் உங்கள் குழந்தைகளிடம் நடை பெறும் மாற்றத்தை உணர்வது கடினம்". ஆக L G B T Q சமூகத்தினரால் நம் குழந்தைகளுக்கு ஆபத்து! அதனாலேயே நாம் இவ்வாறாக எதிர்வினை ஆற்ற வேண்டி உள்ளது!




**இதுபற்றிய கிறிஸ்தவப் பார்வை**

கிறிஸ்தவத்தில், படைப்பைக் குறித்த அடிப்படை நம்பிக்கை 'கடவுள் மனிதனை ஆணும் பெண்ணுமாகப் படைத்தார்' என்பதே. ஆம், ஆண் பெண் இரண்டே பாலினம்தான், மூன்றாம் பாலினம் என்பதே படைப்புக் கோட் பாட்டிற்கு எதிரானது! முதலில் ஆணைப் படைத்த கடவுள் அவனுக்குரிய வாழ்க்கைத் துணையாக ஒரு பெண்ணைப் படைத்து அவனுக்குக் கொடுக்கிறார். மேலும் இவர்கள் இருவரும் திருமண உறவின்மூலம் பலுகிப்பெருக வேண்டுமென்றும் கட்டளையிடுகிறார். (ஆதி 2:20,22) ஆக திருமணம் என்பது ஓர் ஆணுக்கும் ஒரு பெண்ணுக்கும் இடையேயானது. இதையே இயேசு கிறிஸ்து மறுபடியும் மேற்கோள் காட்டி உறுதிப்படுத்துகிறார். (ஆதி 2:24, மத் 19:4,5) "ஆதியிலே மனுஷரை உண்டாக்கினவர் அவர்களை ஆணும் பெண்ணுமாக உண்டாக்கினார் என்பதை யும், இதினிமித்தம் புருஷனானவன் தன் தகப்பனையும் தாயையும் விட்டுத் தன் மனைவியோடே இசைந்திருப்பான்; அவர்கள் இருவரும் ஒரே மாம்சமாயிருப்பார்கள் என்று அவர் சொன்னதையும், நீங்கள் வாசிக்கவில் லையா?" ~ இயேசு கிறிஸ்து.

**இவர்களின் பரிதாபநிலை**

L G B T Q மட்டுமின்றி இந்தக் கடைசி நாட்களில் உலகம் நமக்குமுன் வைக்கும் பல்வேறு புதிய தத்துவங்கள் கடவுளின் நீதியுள்ள திட்டங்களுக்கு எதிரா னவையாகவே உள்ளன. உண்மையில் இங்கு எதுவும் புதிதில்லை. பைபிள் சொல் கிறபடி, "முன் இருந்ததே இனிமேலும் இருக்கும், முன் செய்யப்பட்டதே பின்னும் செய்யப்படும், சூரியனுக்குக் கீழே புதுமை யானது ஒன்றுமில்லை" (பிரசங்கி 1: 9) தகவல் தொடர்பு பெருகியுள்ளதால் இக் காலத்தில் இவை பரவலாகப் பேசப்படு கின்றன. இவையெல்லாம் தொன்று தொட்டு நடப்பவையே.

கூடிவாழும் முறை, பலதார மணம், திருமணம் தாண்டிய கள்ள உறவு, வாடகைத் தாய், விபச்சாரம், வேசித்தனம் இப்படி எல்லாப் பாவங்களும் ஏற்கனவே

இருப்பவைதான். இவற்றை பைபிள் மிகத் தெளிவாக வரையறுத்துக் கண்டித்து, இவற்றிற்கான வழிகாட்டுதலையும் வழங்கியுள்ளது. ஆனால், இந்த உலகம் முன்வைக்கும் கவர்ச்சிகரமான முழக்கங்க ளால் விழுந்துபோய் வாழ்க்கையைத் தொலைப்பவர்களே இங்கு அதிகம்! இயல்பான திருமணத்திற்குட்பட்ட பாலுறவை அடிமைத்தனம் என்றும் வரம்பு மீறிய அருவருப்பான உறவுகளைப் பெருமை என்றும் நம்பும் போக்கு அபாயகரமானது பரிதாபத்திற்குரியது!

இதற்கான விவிலிய வழிகாட்டுதல்

ஒருவன் தான் உருவாக்கப்பட்ட அடையாளத்தில் திருப்தியின்றி அவற்றை மாற்ற முயல்வது, பெண் சுபாவம்கொண்ட ஆணாக இருப்பது, ஓரினச் சேர்க்கை ஆகியவையெல்லாம் வேதத்தின்படி பாவம். (1 கொரி 6:9) ஏறக்குறைய கி.மு 3900 ஆண்டு வாக்கிலேயே சோதோம், கோமோரா ஆகிய நகரங்களில் இது போன்ற அருவருப்பான பாவம் அதிகரித்த போது, கடவுள் அந்நகரங்களை முழுமையாக அழித்ததையும் வேதத்தில் வாசிக்கிறோம். (ஆதி 19:24, யூதா 1:7)

நாம் கவனத்தில் கொள்ள வேண்டியது, வேதம் சொல்கிறபடி நாம் எல்லோரும் ஏகமாய்க் கெட்டுப்போன பாவிகள். இதற்கு L G B T Q சமூகம் விதிவிலக்கல்ல. அவர்களையும் கடவுள் நேசிக்கிறார். எந்த ஒரு மனிதரும் பாவியாகவே மரித்து நரகத்தினுள் நுழைவதில் கடவுளுக்கு விருப்பமில்லை. மாறாக, அப்படிப்பட்டோரும் மனந்திரும்பி நித்திய வாழ்வடைவதையே கடவுள் விரும்புகிறார். (எரே 33:11) ஆம், சில பாவங்களை உடனடியாக விடமுடியாது. ஆனால் கடவுளின் பொருட்டு பாவத்தை வெறுத்தால் கடவுளின் துணையால் படிப்படியாக பாவ சுபாவத்திலிருந்து விடுபடலாம். இதுவே விவிலியத்தின் எளிய மற்றும் தூய வழிகாட்டுதல்! பெண்ணியவாதியாகவும் லெஸ்பியனாகவும் இருந்து மீண்டுவந்தவர் எழுதிய ஒரு நூலையும் இங்கு பரிந்துரைக்கிறேன் "Five Lies of Our Anti-Christian Age".

இக்கட்டுரையைப் படித்ததும் இதை எழுதியவர்மீது பால்புதுமையினருக்குக் கோபம் எழலாம். ஆனால், இக்கட்டுரை அவர்களைக் குறைகூறும் நோக்கத்தில் எழுதப்படவில்லை. அவர்களின் பரிதாப நிலையை எடுத்துரைத்து அவர்கள் அதிலிருந்து மீண்டு தூய வழியில் வாழ்வதற்கான வழிகாட்டுதலை வழங்குவதே எங்கள் நோக்கம்!

பரிதாப நிலையிலிருந்து பரிசுத்த வாழ்வுக்குள் வர இது ஓர் அழைப்பு! •

(கல்லூரி மாணவராகிய ஆண்ட்ரூ கிங்ஸ்லி ராஜ், கிறித்தவத் தற்காப்பியல் பரப்பில் களமாடிவருவதுடன் இளைஞர்களுக்கான விவிலிய ஆலோசனைகளை வழங்குவதிலும் தொடர்ச்சியாக ஈடுபட்டுவருகிறார். சமூக ஊடகங்களிலும் இக்கருத்துகளை எழுதி வருகிறார்.)

பொன்வகவின் வேண்டுகோளின் பேரில் இக்கட்டுரையை எழுதி உதவிய திரு.ஆண்ட்ரூ அவர்களுக்கு நன்றி- ஆசிரியர்




இந்த இதழினைப் பற்றிய உங்கள் பின்னூட்டங்களை குரல் அல்லது வரி வடிவில் 9715 552552 என்ற எண்ணிற்கு வாட்ஸ் ஆப் மூலம் அனுப்புங்கள்.
–ஆசிரியர்.

## பொன்.வ.கலைதாசன் எழுதிய
## மூன்று நற்செய்தி ஏடுகள் வெளியீட்டு விழா

**நாள் : மார்ச் 28, 2024. வியாழன் நேரம் : மாலை 5:00 மணி**
**இடம் : சகோதர ஐக்கியத் திருச்சபை, திருப்பெரும்புதூர்.**

✣ அறிமுக உரை:
**திரு. கிஷோர் குமார்** அவர்கள்
இயக்குநர்,
நற்செய்தித் திருப்பணி இயக்கம்

✣ சிறப்புரை:
**திரு. வீ. வரதராஜன்** அவர்கள்
போதகர், சகோதர ஐக்கியத் திருச்சபை

✣ வெளியீடு மற்றும் அருளுரை:
**திரு. ந. ஜான் ஜெயானந்தம்** அவர்கள்
தலைவர், மோரியா ஊழியங்கள்

✣ முதல் படியைப் பெற்று வாழ்த்துரை:
**திரு. அ. அருள் செல்வன்** அவர்கள்
பொன்வக அவர்களைக் கிறிஸ்துவிடம் வழிநடத்தியவர்

✣ அணிந்துரை வழங்குவோர்:

**தீர்ப்பு**
திரு. **போஸ் பொன்ராஜ்** அவர்கள்
எழுத்தாளர் & மொழிபெயர்ப்பாளர்

**உதிர்ந்தும் மலர்ந்தவள்**
திரு. **பெஞ்சமின் பொன்னையா** அவர்கள்
இயந்திரப் பொறியாளர் & எழுத்தாளர்

**மகளே.....!**
மரு. **யோசுவா த ஞானசேகர்** அவர்கள்
இயன்முறை மருத்துவர், எழுத்தாளர்

✣ **ஏற்புரை:**
திரு. **பொன்.வ.கலைதாசன்**
அருட்பணியாளர்

அனைவரும் வருக!

**அழைப்பும் ஏற்பாடும்: நற்செய்தித் திருப்பணி இயக்கம், 9715 552 552**



## சிறுவர்களுக்கான சிறப்பு நிகழ்ச்சி

**மார்ச் 29, 2024 வெள்ளிக்கிழமை**
**காலை 10 : 00 மணிமுதல்**
**பகல் 12 : 30 மணிவரை**

**பொம்மலாட்டம் | மேஜிக் | பாடல்கள் | கதை |**
**குழு விளையாட்டுகள் | குறு நாடகங்கள் இன்னும்.... இன்னும்....**

இடம்
சகோதர ஐக்கியத் திருச்சபை,
திருப்பெரும்புதூர்

வழங்குபவர்
**திரு. கிஷோர் குமார்**
**இயக்குநர்,**
**நற்செய்தித் திருப்பணி இயக்கம்**

குழந்தைகளுடன் பெற்றோரும் பங்கேற்குமாறு உங்கள் அனைவரையும் அழைக்கிறோம்.
தொடர்பிற்கு: சகோதர ஐக்கியத் திருச்சபை, 9715552552

SIRAHADIPPU, a Christian Bimonthly published by **Pon Va Kalaidasan (a) P.V.Venkatesan** on behalf of **Gospel Outreach Mission** from: 90, Bajanai Kovil Street, Bhimanthangal, Sriperumbudur-602 117 and printed by Rehoboth Dziners, 116, Sri Ram Complex, Periyanaicken Palayam, Coimbatore-641 020
FOR PRIVATE CIRCULATION ONLY
Editor: S. Karal Marx, B.A., B.L.,
**rehobothdziners@gmail.com +91 98430 34323**